சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருப்பேரூர்
# பதிற்றுப்பத்தந்தாதி.

இது

ஷெடி தலத்தில் வசிக்கும்

அறுபத்துமூன்று நாயன்மார் திருப்பணி

**ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய சுவாமிகளால்**

இயற்றப்பெற்று

கோயமுத்தூர்:

ஸ்ரீமான் சிவ. மாணிக்கசுந்தரஞ்

செட்டியாரவர்களால்

கோயமுத்தூர்: நடேசர் அச்சுயந்திரசாலையில்
பதிப்பிக்கப்பட்டது.

1916.

| பாட்டு. | வரி | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 4 | 4 | பழமபொருளை | பழம்பொருளை |
| 11 | 3 + 4 | மிடரு | மிடறு |
| 14 | 1 | வன்பக் | வன்பவக் |
| 36 | 2 | தக்துங் | தக்துவங் |
| 38 | 3 | விட்டினை | வீட்டினை |
| 41 | 1 | மீவவுடலந் | மிவ்வுடலந் |
| 96 | 4 | லஸ்பா | லன்பி |
| 98 | 5 | எற்றுவரி | ஏற்றுவரி |
|  | 7 | விறைடுமெய | வேந்தால் |

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சாத்துக்கவிகள்.

திரிசிரபுரம் வரகனேரி வித்வான்

## ஸ்ரீமத் சோ. வீரபத்திரபிள்ளையவர்கள்

இயற்றியவை.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பூக்க‡ணிணர் மலர்த்துடவைப் புடையுடுத்த திருக்காஞ்சிப்
புனித தீர்த்த, மீத்தவழும் புயல்பெயல்லை விட்டாலும்
வறப்பின்றி விளையச்செய்கள், காத்தமையப் படிந்தவர்
தீக் கன்மமொழித் தாள்கின்ற கடப்பாடுற்றே நீத்தகலா
தொளிரோரூர் திருவாரூர் மறைமுழக்கு நிறைபேரூரே 1

சொல்லாரு மொருகலமத் தலமகனைச் சூழ்ந்தாருஞ் சூழா
நின்ற, வெல்லாருஞ் சுகமாரு மியல்பாரு நலனாரு மிமை
யத் தாரு, மல்லாருங் குழற்பச்சை நாயகியா ரிடனாரு
மணியாருங்கம், வில்லாரும் பிறையாருமெமையாட்கொள்
படியாரும் விமலனார்க்கே (2)

கொங்குவள் நாட்டினடுப் பாளையத்தில் வேளாளர் குலத்
திற் றோன்றித், தங்குமுற வில்லறமாத் துறைபடிந்து சில
காலந் துணைந்தேயம்யா. வங்கதனைத் துறந்து துறந்தானாகி
யித்தலத்தி லறுபான்மும்மை, பொங்குதிருத் தொண்டர்
டித்தொண்டுசிவ பூசையுமே புரியாநின்றே (3)

எத்துணையும் படித்தாலு மெவ்வெவர் †நேயுற்றாலு மென்
னேசாதிப், புத்திபொரு காலத்தும் போகாதென் றுணர்க்

‡ இணர்-பூங்கொத்து † நேய்-நேயம்

குமொழி பொருந்து மாறு, வித்தகவில் லறந்துடைத்தொ
ண் டறவறத்தைப் படைத்து மிலண் விளக்கமாகக், கைத்
தலத்தா விரவலர்க்குத் தன்குலமீ தெனவுநனி காட்டிக்
கொண்டே (4)

தன்னிகரி லாதுறையுஞ் சுப்ரமண்ய சாமியெனுஞ் சான்
றோனென்பாற், கன்னிகரும் வன்மனமுங் கரைந்துருகப் பு
னல்பெருகக் கண்ணூடின்பந், துன்னியகற் கண்டுபோற்
சருக்கரைபோ லமிர்துபோற் சுவையார் தென்சொன்,
மன்னியபாட் டியன்முறையே பதிற்றுப்பத்தந்தாதிவழங்
கி னுறல் (5)

இலக்கியமு மிலக்கணமு மெடுத்தாளுந் தருக்கமென வி
யும்பு நாலு. நலக்குமொரு சித்தாந்த சாத்திரமு மினைத்
தெனவே நன்குகாண்பார், கலக்கமற விந்நூலின்பொருள்
விரித்துக் காண்பவெனிற் காண்பா ரன்றி, யலக்கணுறுத்
தையப்பா டகற்றுதற்கு மவையுணர்வார்க்காகுமன்றே(6

முத்தியுறு பயனுதவ முளைத்தபவக் களைகட்டு முட்டில்
லாமற், பத்தியெனும் பயிர்தழைய வேண்டுமெனிற்பலவா
றுபகர்தலென்னே, நித்தியமோர் முறையேனுமிந்நூலைப்
படித்தாலு நெஞ்சமீதே சத்தியமாய் நினைந்தாலுஞ் செய
லற்று வி தன்பெருமை சாற்று மாறே (7)

முத்தமிழின் றுறைபோய முதுக்குறையா ளர்களிந்தமுந்
நீர் வைப்பி, லெத்தனையோ பேரிருந்து மவர்கருத்தி லுறுத்
தாமலிமையாமுக்க,ணத்தனவர் தமிலிவர் தமுளத்திந்நூல்
செய்கவென வமைத்திட்டானே, லொத்தவிந் நூற்கொரு
நூலே யுவமையிட்டுக் காட்டுதலெற் குசித மன்றே (8)

ஓதப்பயிற்றாலே யெழுதாத வெழுத்தையிட் டோருருவ
மாக்கிப், பூதலத்தோர்க் குதவினனெலழிற் கோயமுத்தூ
ரிற்போந்து வாழு, மேதகைபி ராமலிங்கச் செட்டியார் த
வப்பயனாய் விளங்கா நின்ற, மாதர் ‡ முலை மேலணியும் மா
ணிக்கசுந்தரனும் வணிகன்றனே (9)

வெண்பா

மொழியிற் றமிழினறையின் முக்கண்ண னன்பின்
வழியிற்கண் ணப்பன்சீர் வாய்தல்—விழைபவே
தந்தானஞ் சுப்ரமண்ய சாமி பதிற்றுப்பத்
தந்தாதி யீந்தருமை யால். 10



கோயமுத்தூர் காலேஜ் தலைமைத் தமிழ்ப்பண்டிதர்

ஸ்ரீமத் அ. கந்தசாமிப்பிள்ளையவர்கள்

இயற்றியவை

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

எல்லையிப் புவனம் பூத்த வின்னருள் வடிவப் பச்சை
வல்லியெம் பிராட்டிக் கென்று வாய்த்தபட் டமசன்றுட்டே
பொல்லையி லார்வந் தூண்ட வுதித்தவன் புருவமான
சொல்லையே மலராக் கொண்டு தொடைதொடுத் தணிந்
தான்மாதோ (1)

அன்பெலா மானுக்காக்கி யருளி யலர்நந் தாவென்
றின்புலா மறுபான் முப்பமை பிறைபவர்க் காக்கிச்சிந்தை
யென்பொலா மணியே பென்ன விடையறுத் தியான
மாக்கி, வன்பெலாங் கடிந்தசுப்ர மண்யநற் சாமிதானே (2

‡ முலை-முல்லை இடைக்குறை

அகன்கனி தளும்பக் கண்க ளருவிசோத் தாரை வாக
முகமலர்ந் துடல்பூ ரிக்க முடிக்கரங் கூப்ப வென்பு
நெகவினை யனைய கல்லா நெஞ்சமுங் குழைக்குமென்றாந்
றானுசியிங் கிதுபோற் பத்தி தழைத்த தொன்றுரைக்கற்
பாற்றோ (3)

வெண்பா.

அண்டிவரும் பேதை யாதரிக்கு நற்பேரைக்
கொண்டிருக்கும் பேரைக் குகன்பேரைக் கொண்டவெங்க
டன்னேரில் சாமிதமிழ் காற்றும் பதிற்றுப்பத்
தென்னே யமைந்த வியல்பு.

திருப்பேரூர் ஸ்தானீகம்

## பிரும்மஸ்ரீ இராமசாமிச் சிவாச்சாரியாரவர்கள்

இயற்றியது.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

மண்ணிடைநால் விளங்கும் வான்பேரூர்த் திருத்தளியில்
வயங்காநின்ற, தண்ணிலவு புனைவோற்குப் பதிற்றுப்பத்
தந்தாதிதமிழாற்றந்தா, னுண்ணிறையு மன்பையெல்லா
வுயிர்களிடத் தஞ்செலுத்து முரிமைவாய்ந்த கண்ணிய
னாந் சுப்ரமண்ய சாமியெனு மெனக்கினிய கண்போல்
வானே

திருப்பேரூர் சாந்தலிங்க சுவாமிகள் மடாலயம்

## ஸ்ரீலஸ்ரீ சிதம்பர மெஞ்ஞான சிவாச்சாரிய

சுவாமிகள் இயற்றியது

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

திருவளர்தெய்வத் தீம்புனற்காஞ்சி மருங்குறை, செழும்
பொழிற் போதித், தருவளர் பேரூர்த் தளியினிலமர்ந்த
தற்பரன் பட்டிநாயகன்மேற், குருவருள் பெற்றுத் துறவ
டைந்தடியார்க் குறுபணிச் சுப்பிரமணியன், மருவளர் ப
திற்றுப்பத்தந் தாதிப் பாடலிசைத் தலினைந் தனன்மாதோ.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருப்பேரூர் பதிற்றுப்பத்தந்தாதி.

காப்பு.

வெண்பா.

பார்பரவும் பேரூர்ப் பதிற்றுப்பத் தந்தாதி
சீர்பரவச் செய்யவருள் செய்யுமா—லேர்பரவு
மெட்டுக் குணத்தெம்மா னீன்ற விபமுகத்துப்
பட்டிக்க ணேசன் பதம்.

நூல்

திருவிற் றிருக்கு மணிமார்பத் திருமா றனக்குந் திசைமு
கற்குந், தருவிற் றிருக்குஞ், ‡சதமகற்குந் தலைமை யளித்
தா டனிமுதல்வன், மருவிற் றிருக்கு மலர்க்கூந்தன் மா
னை யிடப்பால் வைத்துவந்த, வுருவிற் றிருக்குந் திருப்
பேரை யுறைவா னென்னு ளுறைவானே 1

வானே முதலி னேழுலகும் வருந்தா தளித்த மலைமாது
தானே தழுவக் குழைந்தவொரு தனிமா முதலே திருப்
பேரூர்த், தேனே கட்டித் திரவியமே திரையிற் பிறவாத்
தெள்ளமுதே, யானே சரண மெனவடைந்தே னருள்வா
யருளிற் பெரியானே

---

‡ சதமகன்-இந்திரன்.

பெரியா ரெனவே மால்பிரமன் பிணக்குண் டகலப் பேதுறுவா, ரரிதா மழலாய்த் தானேயென் றறிவித் தவர்பாண் டியன்முன்னர்ப், பரிபாய் நரிக டமையன்பர் பழங்க ணகற்றப் பணித்திடுகற், குரியார் பேரை முதல்வரையே யுவந்தா ருகந்து முரியாரே 3

உரியான் புலனா யினுங்கடையா மொருவே னெனையு முவந்தாள, †வரியா னறிந்தார் தமக்கறிதற் கடையார் தங்கட் கெஞ்ஞான்றுந், தெரியான் போதி வனத்துறையுஞ் சிந்தாமணிதேங் கடுக்கைபுனை, துரியா தீதப் பழம்பொருளைத் தோய்வார் பவத்திற் றோயாரே 4

தோயா திருந்தைந் தொழிலியற்றுந் தூயோயெளியேன் றொடர்பவத்தி, லோயா துழன்றே யூசலொத் துய்யு நெறியொன் றொருசிறிது, மாயா தவமே யலைந்தலுத்தே னரசே யுனைநா னடைவதற்குத், தாயா யருள்செய் பசுங்கொடிசேர் தருவே பேரைத் தற்பரனே 5

பரனே துயர்கூர் கருக்குழியிற் பன்னா ளலைந்து பரிதவிக்கக், கரனே கோட்டிச் சதுமுகனார் கணித்தென் றலையி லின்னுமொரு, ‡வுரனே யெழுத்தைப் பொறித்திடுதற் குன்னிற் புனற்க ணுறாமெழுத்தாம், வரனே யருள்க திருப்பேரூர் வாழ்வே யெனக்கப் படிமீதே 6

---

†அறிந்தோர் தமக்கறிதற்கரியான், என்றார், ஒருகால் தன்னைப்புணர்ந்தார் கட்குச் சித்தவிருத்தி சுருங்குதலான் மீட்டும் உணர்தற்கரிதாகலின். ‡உரனையெழுத்து உரன்-எய்-எழுத்து.

படியிற் பலவாம் பொருணசையாற் படரிந் திரிய வழிம
னது, படிவுற் றனந்தோற் பவத்துழலும் பாழ்வெவ் வினை
கள் படராமல், படிவுற் றனது தொழும்பாற்றிப் பதியக்
கதியிற்றிருவருளே. படிவுற் றிடுமா றியற்றுதியால் பரிந்
து பேரைப் பதியானே 7

பதியே பரவுமுயர் போகிப் பைந்தாருகஞ்சூழ் திருப்பே
ரூர், நதியேய் வேணிப்பரம்பொருளே நாதா நினதுநளிர்
கழலைக் கதியே புரியார் பசிநலிய தாயர்கூர்ந் தில்லந்
தொறு முழன்று கதியே யிலராய்ப் பலியேற்றுங் கனமார்
பேறொன் றுடையாரே 8

பேருரிலகு நவமணியே பிறவிப் பிணிக்கோ ரருமருந்தே
யாரூ ரடிகட் கிருநிதியே யன்பே யுருவா மண்ணாவோ
நீரூ டிலகு கடலூடு நிற்கு முலக பந்தமெலாங்
காரூ டிலகு மின்னனையே காணவருள்வாய்பெருமானே

பெருமா னெனவுந் திருப்பேரூர்ப் பெம்மா னெனவும் பி
றங்கல்வரு,மொருமான்மருவும் பரனெனவுமுள்ளமுருகித்
துதிப்போர்க்குத், திருமா லயனிந் திரன்முதலாந்தேவர்
பதமுங் கடந்தபதந், தருமா லந்த குணங்குறிக டணந்த
விமலப் பெரும்பொருளே 10

வேறு.

பெரிய தீஞ்சுவைக் கடலிடை யெழவிடப் பிணிப்பினு ல
யன் றுதை, கரிய மேனிய னுய்ந்தன கழலுறக் கதமென
மகிழ்ந் தன்னோற், குரிய தேவி‡நா ணிற்றீயது நின்மிட
ருணர்த்துமே லுலகெல்லாந், தெரிய நின்னருட்டிறத்தை
யா ரளவிடச் செய்வர்பே ரையந்தேவே 11

‡நாண்-மங்கலசூத்திரம்

தேவதேவனை யுமையொரு பாகனைச்சிந்தனை புரிநற்பேர்
பாவமுற்றினும் பறிக்கருள் பேரையம் பதியுறை பெரு
மானை, மேவலாரெயில் பொடிக்கவெண் ணகையனை விளை
வொடு வணங்கார்தார், யாவரயினும் பலம்பல வெடுத்தெ
டுத் தலக்கணுற் றலைவாரே 12

அலைநெடுங்கடற் றுரும்புபோ லடியனே னிளைப்ப
வத்துளே, நிலையிலாதலை யாதுநின் றிருவடி நிழலை யரு
ளாமே, புலைய னெனப் புறக்கணித்த கற்றிடிற் போங்
கதனை யருள்செய்பர், றிலையிரும்புவி மீதுயர் பேரையி லிலகு
மெம் பெருமானே 13

மானினேர்க்கவொண் மதிநுதன் மடந்தைமார்வனப்பிலே
மயலானேன், வினை னுயிரினு நினகழ் விறைஞ்சுதலேய்ந்தன்
னருள்வாயே, பானிலாவணி சடையனே பசுங்கொடிபா
கனே யுயர்பைங்க ணினேர்கொடி யாயருட்பேரைவா
ழாதியந் தமிலானே 14

அந்திவண்ணனே யவிர்மதி சடைமிசை யணிந்தருள்
திருப்பேரு, எந்தையேநினை யிடையறா துள்கியேத்தெ
டுக்கலா நிலத்தாமென், சிந்தையவ்வணஞ் செய்திட வலி
யனோ செழுமலர்த் துவிசின்மேன், முந்தை நான்முறைமு
தியல னிச்செயல் முடியுமா றறியேனே 15

அறிவ றப்பொதி யாணவத் தொடரினால் யானென தென
வேவையம், பொறிவ ழிப்புலன் றெறுமுளம் புகுதமெய்ப்
புண்ணிய முணர்போத, நெறியோ ரிஇயுழ னீசனேற்
குனதடி நேயமே வுறுநெஞ்சம், பெறவ ருள்புரி பேரை
யம் பதியுறை பேரருட் பெருமானே 16

மானை யோர்கரத் தேந்திய வள்ளலை மதிநதிச்சடையானைத்
தேனை யாரமிர் தத்தினை யின்னருட் செல்வனைத் திருப்பே
ரூர்க், கோனை நாண்மலர் கொய்துபூ சனைசெயக் குறித்தி
லா தவமேயிவ், வூனை யோம்புதற் குலகினின்மறஞ்செறிந்
துள்ளநா ளுழைத்தேனே 17

உழையி ருடனி லூர்குறித் தேகுவோ னுணர்விலா தவ்
னுற்ற, குழியி டைப்படு மாறுபோல் பேரையங்குழகனை
நினதாளை, யொழிவி லாதுறப் போந்தவ னெண்டொடித்
தடக்கைவா னுதற்றெமென், மொழிம டந்தைய ராதரப்
பாவையில் வீழ்ந்தியான் முடிவேனே 18

முடிய வன்பத்தொடர்வழி முறைவரு முகிழ்த்தநின் றொ
ழும்பாற்றிப், படிய நின்பதமலர்வயிற் பருகவான்பகமுறு
பசுந்தேனை, யடிய னுக்கருள் செயத்தகும் பருவமீ தடிக
ளே கரியீந்த, †மடிய ணிந்தருள் பேரையில் மேவிய மாசி
லா மணியேயோ 19

மண்ண கழ்ந்தும் வான் முழுவதுஞ்* சுற்றியு மாலயன் கு
றித்திட்ட, வெண்ண முற்றிலா திகல்வலிகுறைந்தனரென்
னினு மியைந்தேழை, கண்ண கன்றபே ரையினினைக்கண்
ணுறீஇத் துதிக்க மேனுளிற், பண்ணி முற்றிய மெய்த்த
வம் நன்றுகாண் பாயுமால் விடையானே 20

வேறு

பாயு§மால் விடையானே பரம்பரனேபசுபதியே பண்ணார்
பேரை.மேயமா தவப்பயனே ||வினையொழிக்குங்குருமணி

---

வன்பவத்தொடர் முடிய, வெனக், கூட்டுக.
†மடி-போர்வை. § மால்-விட்டுணு,, எனவே மால்விடை
யான் என்றது, பண்புத்தொகையாமாறுணர்க.
||வினை-ஈண்டு, தீச்செயல்.

யே மேவிநின்னை, நேயமாய்ப் பரவியரு ணெறிமேவு மதி
விலனாய் நிலையில்லாத, மாயமாஞ் சகத்திலுறு வாழ்வதனை
மதித்தடியேன் வருந்துகேனோ 21

வருந்தியருந் தவம்புரிவோர் மலர்ந்தவித யாம்புயத்தை
மருவியின்ப, மருந்தவருள் சேவடியென் னகத்துமுறப் ப
ணித்தருளி யையாவின்னே, திருந்துகதி யுறக்காட்டித்
தீவினைக ளறவோட்டிச் சிலம்பிலம்மைக், கருந்துணையே
பேரையுறை யம்மானே யடியேனுக் கருள்செய்வாயே 22

வாயுறநின் புகழ்வாழ்த்தி மலர்தூவிக் கரங்குவித்து வண
ங்கி யேத்தி, நேயமாய் நின்பெருமை நினைந்துநினைந் தெ
னதுள்ள நெகிழ்ந்து நாளும், பாயவிழிப் புனலுகுத்துப்
பரவுமொரு பணியலது பகிற் பேரை, மேயபர சிவனே
யான் விரும்புகிலேன் சிறிதுமொரு வேறுபாடே 23

வேறாக வினையேனை விட்டனையேற் கெட்டலைவேன் வெய்
யமாயை, மாறாக வெனைத்தனது வசமாக்கிமருள்பெருக்கி
வருத்த வந்தோ, நீறாக மணிந்தருளு நின்மலனை யருள்
கூடு நெறிதா மாதோர், கூறாக வைத்ததிருப் பேரையரசே
நின்னைக் குறுகினேற்கே 24

குறுமைசெறி ‡குரம்பைதனை யோம்புமதே பொருளாகக்
குறித்தெந் நாளுஞ், சிறுமையுறு தொழிலியற்றுஞ் சிற்றி
னத்தைச் சேராதுன் றிருத்தாண்மேவி, நறுமைநிறை தி
ருப்பேரூர் நாயகமே சுகமடையும் நாட்டம் வைத்தேன்
வறுமைகெட விக்கணமே வந்தருளிச்சிந்தைமலி மருடீர்ப்
பாயே 25

தீர்த்தருள்வாய் திறன்மாயா §திமிரமெலா மகன்றிடநின்

குரம்பை-தேகம். § திமிரம்-இருள்.

றிருக்கண்ணே, பார்த்தருள்வாய் பரிவாகப்படிமேற்சற்
குருவாகிப் பதமென் சென்னி, சேர்த்தருள்வாய் சித்தாந்
த முத்திநெறி சேரவருள் செய்தேயென்னைக், காத்தருள்
வாய்கருணைமலர்கற்பகமே திருப்பேரூர்க்கண்ணுளானே

கண்ணதனைப் பறித்தனது கழற்கமலத் தருச்சனைசெய்
கரிய மேக, வண்ணனன்பு தனக்கிரங்கி மாற்றலரைத் தெ
றுமாழி வழங்கு மந்தி, வண்ணநின திருவடிக்கண் மலர்
தூவியிறைஞ்சாத வழக்கே யென்றன், வண்ணமதே யானு
மும் வந்தருள்வாய் திருப்பேரூர் மருந்தன்னானே 27

அன்னையப்பா வென்றழைத்தே மம்மைதிருத் தாஞான
வமுதமுண்டு, சொன்னயப்பா மறைப்பொருளைத் தொகு
த்தருட்பா மொழிகாழித் தோன்றலார்த,மின்னிசைப்பா
வினைக்கேட்க விசைந்த திருப் பேரையப்பா வினைந்துவாடு
மென்னை [a]யப்பா வீட்டற்றென் றிரங்குரைக்கும் புன்மொ
ழிக்கு மிரங்குவாயோ 28

இரக்கமே யியற்கைவடிவாகவொளிர் பரம்பொருளென்றி
யம்ப வந்நாள், கரிக்குருவி நாரைமத கரிநரிகாகஞ்சிலந்தி
கான மஞ்ஞை, குரக்கெறும்பு கோம்பி [b]பசமொடுநாகம்
போற்றவருள் கொடுத்ததெய்வ, மருக்குலவு திருப்பேரை
வள்ளானிற்றெழுமுத்தி வாய்க்குநதானே 29

வாய்மைநெறி யறியாது [c]மற்கடத்தை யொத்தலைந்துமன
மே நாளுந் தீமைசெறி யைம்புலனைச் சேர்ந்து நகைச்சே
றனைந்து தியங்காதந்தத், தூமறையுந் தொடர்வரியதொல
பேரைச்சோதியடித்தொண்டு பூண்டே, யாமையெனவக
மடங்கி யஞ்செழுத்தி னடைவுணர்ந்தீண் டமர்வாயன்றே

---

a அப்பா-இரக்கக்குறிப்பு. b அசம-ஆடு. c மற்கடம் குரங்கு.

வேறு

அன்றலர்சொரிந்தோ னழனுதல் விழியாலழியவு d மளியு
ளம பெருக நின்றனைச் சிலையா லெறிந்தவன் கதிமே
னிற்கவும் புரிந்ததன் பென்ப, தொன்றுநா னின்பாற் கு
றையிரந் தேழை யுய்ந்நெறிக்குதவுக வையா, வென்பது
மஃதே போதிமாவனத்திலிலங்கெழிற் றனியிலார்பவனே

புவங்களெண் ணிலவாய்ப் படியிலுற் பவித்துப்பதிதனோர்
புவத்தினும் பரிவாய்த் தவங்களைப் புரிந்துன் சரணபங்
கயத்தைச் சார்ந்திடா துலகினை மதித்தே றுயவந்தனிலலை
ந்தே னத்தனே கண்பார்த் தருடிருப் பேரையம் பலத்தி
னவந்தரு பரமா நந்தமெய்ஞ் ஞான நடம்புரிந் தருளு,
நாயகனே 32

நாயகன் பச்சை நாயகிக் கொருபா லல்கிய புனிதன்மா
லயற்குத், தாயகன் பேரைச் சங்கர னெவைக்குந் தண்ண
ருள் கொழித்திடுந் தலைவன், றாயபொற் சரணப் புணைபி
டித் திந்தத் தொல்பவக் கடல்கட வாது, நீயனே வாளா
நின்றனை பேதை நெஞ்சமே யென்செய நினைந்தே 33.

தேனுலா மிதழித் தொடையலார் சடையுந் திருத்தகு வி
சித வாணுதலு, நானவார் கூந்தற் றெய்வமங்கையர்நாணு
ட்டிய கண்டமு மிமைய, மீனவாங் கண்ணி தழுவியசெய்
ய மேனியும் விளங்கவம் போதிக் கானவா மொருவன் வி
ரைந்தென துள்ளங் கலந்தனன் கழிபவா ணவமே 34.

---

d அளி அன்பு,

ஆவலாற் றிருவைந் தெழுத்திய லுணர்ந்தே யன்போடு
மலர்பறித் தடியிற் றூவிநின் றிருத்தா டொழுதுள முரு
கித் துணைவிழி களிற்புனல் சொரிந்து,பாவினா னினது ப
ண்பெலாமமையப்பாடிலே னென்னினுமெளியே,னேவலி
ல்துயரங் கெடவருள் பேரையுத்தமா நித்தியப்பொருளே

நித்தியப் பொருளை நின்மல விளக்கை நினைபவர் நெஞ்சை
விட் டகலாத், தத்துவங்கடந்த மெய்த்தவ மணியைச்சச்சி
தாநந்தநல் வடிவைக், கைத்தல மமர்ந்த நெல்லியங் கனி
போற் கண்ணுறக் காண்டலுந் தேடி, வைத்தபொற் குவி
யலென்ன மெய்ஞ்ஞானம் வாய்த்தது போதிமாவனத்தே.

வனிதையர் நகையுங் குழவிமே லார்வு மண்மனை † வெறுக்
கைமேல் விழைவுங், கனைகட லுலகிற் பெறற்கரு மக்கள்
காயம தெடுத்துமுள் ளொன்றிப், புனிதமெய் யடியார் சிவ
சிவ வென்னப் போற்று மெம்போதிமாவனத்துப், பனி
மதி வேணிப் பரமனைப் பணியாய் பாவிக ளடைதல்பாழ்
நரகே 37

கேவல நிலையின் மலவிரு ளிடையிற் கிடந்தபல் பசுக்களை
யெடுத்தே, யாவலாய்ச் சகலந் தனிலுடல் கரண மாதிய
வளித்துநற் சுத்த, மேவரப் புரிந்து வீட்டினை யுதவு மெ
ய்ப்பொருளை கைப்பொருளாக, வாவது கருதிற் போதி
சூழ் பேரை யம்பதி யடைவர் மேலவரே. 38

வரையிலார் பசிய மரகத வல்லி மருவிய கற்பகத் தருவே
கரையிலாப் பெரிய கருணையங் கடலே காமனைக் காய்ந்த

† வெறுக்கை-செல்வம்.

கண் டணிதேய, யணையிலா டரவம் புனைந்தருளரசே
யடியவற் கெளிய னென் றுனது, விரையுலா மலர்த்தா ள
டைந்தனன் வினையை வீட்டிய பள் பேரை விண்ணவனே 39

பேரையம் பதியிற் கோயில்கொண் டமர்ந்த பிஞ்ஞகா சா
தகப் பறவை, காரையே நாடுஞ் சக்கரவாகங் கதிரிளந்
திங்களை நாடும், வாரணி முலையார் தங்களைக் காம மயக்கி
னோர் நாடுவர் வழங்கு, நீரரை வறிஞர் நாடுவ ரடியே னாடு
த னின்னருள் விளைவே 40

வேறு

வினையி னைப்பொசித் தொழியுநாள் வீயுமிவ் வுடலந்
தனைநி லைத்தெனச் சலனமுற் றயர்ந்திடுந் தமியே
னுனைநி னைந்துநைந் துருகுமெய் யுழுவலன் புறமேவார்
நினைவெ னக்கருள் புரிதிருப் பேரைநின் மலனே 41

மலம ருவிய மனமெனு மற்கட மைந்து
புலம ருவிடப் புந்திநைந் துன்னடி பொருந்தா
தலம ருமெனை யஞ்சலென் றருள்புரி பேரைத்
தலம ருவிய சச்சிதா நந்தசற் பரனே 42

பாம வற்கெனைப் புரப்பது வெனத்தினம் பணியுந்
தாமி லாதயர் சழக்கனே னெண்ணிலுந் தனி||நால்
கான யிற்கரக் கந்தவே டந்தையம் பேரை
யானெ னக்கரு ணாலந்தா வஞ்சுவா னலனே 43

---

நால்கான் றூங்குகின்ற கையன்,-விநாயகக்கடவுள்.

வானநாடரும் நாடரும் போதிமன் றிடத்தின்
ஞானநாடக நவிற்றுநின் நகைமல ரடியை
யீனநாடவந் திருவருள் செய்திநீ யுலகத்
தூனைநாடுதலொழிந்துயர் கதிமிசை யுறவே 44

உறுத றுய்க்கலா தியவெலா முன்னரு ளூட்டப்
பெறுத லன்றியிப் பேதையேன் பெறத்தகுந் தாமோ
சிறுத கவினேன் சிந்தைநின் சீரடி மலரி
னிறுவு மாறருள் பேரைவாழ் நித்யதத் துவனே 45

‡ தத்தைமென்மொழிப் பாவையர் தமையடைந்தவர்வெண்
முத்த வாணகை யிடைவரு முறல்வாய் முகந்து
பித்த ரோகியுள் ளிழிதகைப் பெரும்புலை யனையே
பொத்த லங்கிடா தருடிருப் பேரையுத் தமனே 46

உக்க மக்களி முகலெனப் பேரைவா ழொளியைப்
புக்க கத்தினி லெழுதிய நாவினாற் புகன்றுஞ்
சிக்க மீதுற வழுத்தியுஞ் சிந்தனை புரியா
ரொத்த லத்திடை மேனினு †மிசையிலா தவரே 47

இசைய விழா வினமலர் கொய்துபொன் னடியின்
மிசைய ணிந்துளங் குழைந்துமெய் சிலிர்த்திரு விழிநீர்
கசிய நந்திருப் பேரையங் கடவுளைச் சேர
நசையில் மானுடப் பவத்தினு நாய்ப்பவ நலமே 48

நலந்த னிற்றிகழ் நாகரும் நாடரும் பேரைத்
தலந்த னிற்சிவ சங்கரன் றொழு தணைந்து
நிலந்த னிற்பல தெய்வத நேயமுற் றலைவார்
பலந்த விர்த்திளங் காயுணும் பண்புவேய்ந் தவரே 49

‡ தத்தை-கிளி. † இசையிலாதவர்-புகழ் இல்லாதவர்.
பலம்-பழம்.

வேளை யூதிப்பல் பசுக்களை விரைந்தடிப் படுத்தி
மாயை மாப்பசுத் தன்னையு மலரடிப் படுத்துந்
தாயை நேரிருப் பேரையஞ் சாமியிப் புழுத்த
நாயை யுமிகழா தருள் வானருணலமே 50

## வேறு

வானாதி யைந்து பூதங்க ளாகி மறைநாலு மேவி யுணரா
ஞானா விலாச மயமாகி யன்பர் நாட்டத் திலங்கு மணியே
தேனாடு போதி வனமீ தமர்ந்த சிவமே விரைந்து சிறியே
னூனாடு மிந்த வுடலாடு முன்ன ருணமே வுபாய முரையே

உரையற்ற மோனதுறவோ ருளத்தி லொளிர்கின்றசோதி
வடிவே, புரையற்ற போத மயமாய் நிறைந்த பொருளா
ன பேரை யமலா, தரையுற்ற போக நிலையிற் கிடந்து த
ளர்வுற்ற பேதை நினது,கரையற்ற வின்ப நிறைவுற்றபாத
கமலத்தை நாடவருளே 52

அருளத்தனாதிபுரி மேவுமீச னனையாகி யென்முதவு
குருளைக்கிரங்கி முலைதந்த தந்தை குறியற்ற வாதிமுதல்வ
னிருளைப்பெருக்குமிகலாண வாதியிடையிற்கிடந்துசுழலு
மருளிற் றவிக்க வடியேனை யிட்ட வகையென் கொலேது
மறியேன் 53

அறிவே பழுத்த கனியே யினித்த வமுதே வடித்த மது
ரச், செறிவே றுதற்க ணழலா லெரித்த சிவமே கருப்பு
வில்லை, மறிவேய் கரத்த வுயர்பேரை யத்த வண்சத்தை
யொத்த கழலைக், குறிவேறு பட்டு நமன் மேவு காலை xகு
றைகோ ளிலாம லருளே 54

மாயை-மாப்பசு-திருமால், x குறைகோள்-இரத்தல்

அறமென்ப துள்ள மதிலை யுதித்து மயலார் தமக்கொர
றுவும், பெறவென் றுமொன் றளியாத பேதை பேரை
ப்பதிக்கணிறைநின், றிறமொன் றுமுன்னி நெருமன் பி
லாத சிறியேனையாள நினையா, யுறவென் றுமிலைந்து பணை
பென்று மென்று முணராத ஞானவுறவே 55

உறுமா தரத்தோ டினையே வழுக்கு முளமே யளிக்க
வொழிபா. தொறுமா தவத்தி னிலைதேர வெற்கொர் துற
வே யளிக்க வினையா, மறுவாதை யற்று விடுமாறு துற்ற
மதியே தழைக்க வருளைப், பெறுமா றளிக்கவருண் மேனி
கொண்டு பேரைக்க ளுற்ற பெருமா 56

பெருமா வெருக்க மிசையேறி வட்ட நிலமேபு ரக்குமாசு
மருமா மகத்தை யடைவே யியற்றி யமேச னுற்ற வளா
முன், திருமார்ப னுற்ற வொருசீரும் வேதனுறு சீர்களான
வெவையுங். ‡கருமா வுரித்த வொருபேரை யத்தனடியார்
கணிப்ப திலையே 57

இலைகாய் கிழங்கு புனலையருந்தி யிகலையயின்றிநெடிய
மலைமே னெருங்கு முழையூ டியற்று வளர்மா தவத்தி ன
டையு, நிலையே நினைக்கிலொருபோ தளிக்கு ||நிகர்பேரை
யத்த னிடமன், பிலையே யெடுத்த பவமே யியர்த்த மென
வே யிசைக்கு மறையே 58

மறையா கமத்தி னுரையே யுரைத்த வழியே வழுத்தியிரு
தா, ளிறைபோ துளத்தி னிடையே யிருத்த விலையேனு
முற்ற வெளியேன், குறையே யிரத்த றனையே குறித்த
விலையேல் குணிப்ப தெவரே, கறையே களத்தி னுறைபே
ரையக்க கனிவோ டிரங்கி யருளே 59

‡ கருமா-யானை, || நிகர்-ஒளி.

அருளை குறித்த வடிவாகு மென்ன வருணூல்க ளோது
மரிய, பொருளை யுயிர்க்கு ளுயிராய் நிறைந்த புனிதா பு
விக்க ணடியேன், மருளை யளிக்கு மொருமாய வஞ்சமதி
லே வருந்தன் மாபோ, தெருளை விளக்கி யுயர்பேரை மே
ய சிவமே செலுத்து னருளோ 60

வேறு

அரும்பெறலொன் றேழைக் ககப்பட்ட தப்பெரிய
வரும்படியோ வாக்கு மனமுங் கடந்த வொரு
பெரும்பொருளு மந்தனைப் பேசி னுயர்முக்கட்
கரும்புதிருப் பேரூர்க் கனகா லயம்புகவே 61

வேலை யுலகை விரைந்துசுற்றி யோடி னும்பன்
னூலைப் பயந்தரிய நுண்ணறிவு மேவுகினு
மேலைச் சிதம்பரத்தின் மேய பரமனிரு
காலைப் பிடியாரைக் கைப்பிடிக்கு மாணவமே 62

ஆணையிடு வேணினக்கே யாட்செய்யுங் கொண்டனெனக்
காணிற் றிருப்பேரைக் கண்ணே யெளியேனை
மாணூர் நினது மலரடிக்கட் சூட்டிவிட்டா
லாணவங்கொண் டென்று மலைந்து திரியேனே 63

ஏனோ கடைக்க ணிறையுஞ் செலுத்தாமல்
‡மோனோக்க மிட்டாய் விரைந்துதிருப் பேரூரில்
வானோர் மொழிகேட்டு வந்தமத னைப்பொடிப்ப
தானோப் பினக்குலகி லன்புசெய வந்தேற்கே 64

வந்தித் திலைபோதி மாவனத்தெம் பானடியைச்

---

மோனோக்கமிடுதல்-பராமுகமாயிருத்தல்.

சிந்திக் கிலேனாளுஞ் சென்றலபஞ் சூழ்ந்து
முந்தித் தொழும்பின் முறையறியா மூடநெஞ்சே
[illegible]ரிணமன் றண்டகர்க்கென் செய்வாயே 65

என்செய்வல் பேதை யிறைவா வெனதுசொந்தப்
புன்செய்கை யாரப் புதைத்துவெட்டி போர்திருத்தி
மின்செய்க பத்திப் பயிர்விளைக்கும் வேளாண்மை
யென்செய்கை யென்றார் கிலேயேற் ‡பிழைப்பதற்கே 66

பிழையே புரிந்தலைந்து பேய்போலப் பூவுலக
முழுதும் பலச்சரக்கை மூட்டைகட்டிக் கொண்டுவந்து
விழைபடைந்தேனின்னை யெனைவிட்டுவிரைவிற்செலவாய்க்
கழிவதெவன் பேதைக் கதிர்மணிகள் விற்றேனே 67

விற்றுண்டு மொன்றை விளைத்துண்டு மொப்பறியார்க்
குற்றடிமை யாக வுழைத்துண்டும் வாழாமன்
முற்று நினது முழுக்கொண்டி லார்ந்தவெனைப்
பற்றுங்கொல் பேதைப் பரமபவச் சங்கிலியே 68

சங்கக் குழையுஞ் சடைமேற் சலமகளுந்
திங்கட் கொழுந்துந் திருக்கரத்தின் மான்மழுவுந்
துங்கவெண் ணீறு துதைந்தவருட் கோலமுமாய்த்
தங்கின னென்னெஞ்சில் தனிப்பேரூர்த் தற்பரனே 69

பரிந்துன் விழைவின் படிநடக்கும் பண்பின்க
ணிரிந்தநெஞ்சத் தார்துன்பமெய்துதல் மெய்யாமெனவே
தெரிந்திடவோ ||நந்தித் திருக்கே வெழில்வதனஞ்
சரிந்துவிழச் செய்தாய் தனிப்பேரை வாழ்வாயே 70

---

‡ பிழைப்பதற்கென் செய்வலெனக் கூட்டுக. || சிவபிரா
ன் நந்திவதனஞ்சரிந்து விழச் செய்த சரிதம், பேரூர்ப்
புராணம் பள்ளுப்படலத்தா லுணரப்படும்.

வேறு

யாயிற் புலிசெறி யுடலிற் சுழலுறு மனதிற் கடுமற நெறி
மேவு, நாயிற் கடைபடு தீயெற் குனதரு ளலமே பெறுவரம்
நல்காயே, மாயத் தவர்கொடு ஞாயிற் பொடிபடு மாறே ந
கைபுரி மாதேவே, தாயிற் கருணைய னேயிப் புவிதொழு
தண்பே ரையிலுறை யெங்கோவே 71

கோவே யருணிறை கடலே தணமலி குன்றே மன்றிடை
நடமாடிக். தேவே செழுமறை முடிமே வியபர சிவமே த
வர்தொழு முமைபாகா, மூவே டணைமுத லுறுவா தனைக
ளின் முட்டுண் டுழிதரு முழுமூட, னவே னையுமுயர் கதி
யார் தரவருளா ரேசே பேரையி லம்மானே 72

மானு வெழின்மத வேளே வடதிசை மகனே வளர்தரு
வேயென்று, தேனுர் கவிபல புலவீ ருமியிடை செருழுங்
குறுநோயு மீயாத, நோனு நிதியினர் மீதே புகல்கவிர்
றங்கட் கெதுவிழை வுயர்பேரை, ஞானு கானே யமைத்
தோர் கவிதனை நவில்வீர் தரு‡மதனைத் தானே 73

தானு கியபர சிவமே முத்தொழில் கருமா றயனரி யானு
யும், வானு யனல்புனல் மண்கா லாயும் வயங்கும் போதி
வனத்தானே, மேனுள் வினைகெட நானு னிலமிசை மேவிப்
பலவினை புரியாதே, யானு னினதடி யற்கே பணிபுரி தரு
மா றருளுந்தையையாவே 74

வேதத்தடைவரு நிலையுங் குறுகினர் விழை‡பெத் தகைய
வ ரானும், மேதற்குரியவ ரெனநின் சிரமிசை மிளிருஞ்

---

‡ அதனையென்றது விரும்பிய தொருபொருளை எத்தகை
யாரானும், என்றதற்குப் புண்ணியபாவச் செயலதனையு
டையவரானு மெனப்பொருள்படு மாறறிக.

சகரரையுய்வித்த, ‡வோதப்புனல் †லிறைமனைவைப் புணர்
மதி யுணர்வித்திட நினை யுணராதே, பேதப்படுவது மன்
னே பேரையி லீசா விருநில நார்தாமே 75

மேகந் தவழுப ரிசைமே லடையினும் வியனு ளிமைமு
ழுன்றேடி, யாகங் குறுகி யொளித்தா லுந்தெறி களவுக் க
ருமன் விடானன்றிப், §பாகம் பெறுவது மிலவீ டுறுநிலை
படியப் பழமல நமரங்கா, ளேகன் போதி வனத்துளிணை
யடி யெய்தீர் வினைவினி லுய்வீரே 76

||ஏட்டில்வரைந்த வெழுத்தா நின்னை யிறைஞ்சற்கெண்ணு
பறுநரின்பந், தீட்டியகல்வி னெழுத்தாமவ்வழிசேர்ந்தோ
ர்க் கிருதிற னும்பற்றார்க், கோட்டிய சீரி னெழுத்தாமெ
ன்ன வுணர்ந்தே தொழுமொரு சிறியேற்கு, வீட்டியல்
காட்டாய் போதிவனத்தொளிர் விடாஞானவிளக்கேயோ

விளைவைத் தெறவொரு கன்றாவெற்றிய மேலோன் காண
நிருத்தஞ்செய், தளவக் குறுநகை பாகா வடிகேள் சாரும்
உபிறவா நெறியுற்று, மளவில் ௨கம்பலைகொள்ளா தென்று
மடைந்தின் பார்தர நுகர்வானில், விளவற் கந்நெறி யருள்
வாயென்ன வியப்புங் கூற்றுவியப்பாமே 78

மேனி தளர்ந்திரு கால்கை யயர்ந்திரு விழிக ளிருண்
டொரு கோலூன்றி, நாநிலமீது களாடி நடந்திடு நாவள

---

‡ ஓதப்புனல்-கங்கை, † இறைமனைவைப்புணர்மதி - சந்திரன். § பழமலம் பாகம் பெறுவது மிலவெனக்கூட்டுக

|| ஏட்டினெழுத்து-சிறிது நாழினழிவது, கல்வியினெழுத்து அழியாதது. சீரினெழுத்து உடனேயழிவது. உபிறவாநெறி-பேரூர்ப்பரியாயநாமங்களிலொன்று. ௨ கம்பலை-துக்கம்

னுக்கு நாடோமன், மேனிலை நின்றற ஞர்தொழி லானிக
ள் மேமிமேன்மைறயி லெய்மோனே, நானி னடைக்கலமெ
ன்னினுமாதிபு மேசர்னி னைந்து நயந்தருண்மே 79

மேரு வரைச்சிலை கோடி யகற்கொரு விடைதனை யத்திர
மாகக்கொண்டோ, †யிரு நெறிக்கடையாரெயின்மூன்றையு
மெங்கடையாபானைமேனுள், காருவனத்தினு மோர்நட
னம்புரி சல்க மலர்ப்பத னேபேறுர்க், காருமழ் சங்கர
னேயனி யாய்நின தன்பர்கள் கைக்கொளும்வர்ழ்வினை யே

வேறு

வாழ்வை யுன்னி வருந்தி மதியிலா
தேழ்ப வத்தி னிடர்ப்படு மேழையேன்
றாழ்வ கன்றுன் சரண்டனைச் சார்ந்திடுஞ்
சூழ்வு சொற்றருள் பேரையஞ் சோதியே 81

சோதி யுன்னடிக் கொண்டர்க்குத் தொண்டுசெய்
நீதி யோர்க்கு நெறிநின் றிடாதவென்
றீதி யாவுங் களைந்தருள் செய்க நற்
போதி மாவன மேவிய புண்யனே 82

புண்ணி யத்திருப் பேரைப் புனிதனே
நண்ணி வாழ்க்குத னன்னெறி யன்றியிம்
மண்ணிற் பற்பல தெய்வதம் வாழ்த்தல் செம்
புண்ணி லீயுறு புன்னெறி நாடினே 83

நாடி மாரு னாநந்த நாடக
மாடி நின்கழற் கன்பு செய் வார்தமைக்
கூடி மாறு குறித்தருள் பேரைவாழ்
கேடி வார் செவி சூடிய வள்ளலே 84

† அடையாரெயின்மூன்றையு மிருநெறிக் கெனக்கூட்டி முடிக்க.

37 10
(8450)

வள்ள லேநின் மலரடிக் கன்பெனை
துள்ளத் தூடில தாயினு முன்னருள்
வெள்ளத் தூடுறும் வேட்கை யொழிந்திலே
னெள்ளி டாதருள் பேரையி லெந்தையே 85

எந்தை யாயெனை யீன்றரு டாயுமாய்ச்
சிந்தை யாகுலந் தீர்த்தருள் *தேசியாய்
வந்து பேரையில் வாழ்பட்ட நாயக
னெந்த வேளையு மென்னுள் ளிருப்பனே 86

இருத லைக்க ணெறியுறு மிர்க்கன
மருவி நாப்பண் வருந்து மெறும்பெனத்
தரையின் மீது தளிக்கிட லின்றியே
பெரிது வந்தருள் பேரைப் பரமனே 87

பாம னேநின் பழவடி யாரொடுந்
தாமி லாவெனை யுங்கடுத் தாண்டுகற்
§நிரம ளித்தருள் செய்யபொன் மேனியி
லரவ மார்த்திட்ட பேரைய மண்ணலே 88

அண்ண லைப்புர மூன்று மழலெழப்
பண்ணும் வெண்ணகைப் பேரைப் பரமனை
நண்ண லாதபுன் ஞயனை யாரையே
யெண்ணில் மேவு மியம்பரு மின்னலே 89

இன்னன் மேவி யிடர்ப்பட லேழையே
னென்ன வின்றல நீயறி யாதல்
Cபன்னு பேரைப் பதிவள ரீசனே
யுன்னு வாரொழிந் திப்பவ மோடவே 90

* தேசி - குரவன் § நிரம் - கதி C பன்னுதல் - துதித்தல்

## வேறு

ஒட்டெடுறவா நந்தவெள்ளந் ததும்பியுள்ள முலந்துகாத
னேக்கு மொருவாபோற்றி, வாட்டுமல பந்தமற நினைந்து
கால வன்வழிபட் டருச்சித்த வள்ளால் போற்றி, நாட்ட
விழிப்பரிமொழியை நயந்துமேவி நளிர்காமதேனுதொழு
நாதா போற்றி, கோட்டமிலாச் சுரர்பசுவின் கன்றுலிந்த
குளப்பினெழிற் சுவடணிந்த குழகாபோற்றி 91

போற்றிநெடு மானடனங் காண்பான் வேண்டப் பொரு
வருகோ முனியாகப் புரிந்தாய் போற்றி, விற்றிருந்த வ
யன்பட்டி முனிவனுக வேதமுறை தெரிந்திடச்செய் விம
லாபோற்றி, நாற்றிசைக்க ணருள்விரவப்போதிமன்றுள்
ஞானநா டகநவிற்று நம்பாபோற்றி, பாற்றரிய வலிகெழு
தானவரால் வானோர் பயமடையத் தாண்டவெழிற்பரனே
போற்றி 92

பரசிமுரு கனைமருதச் சிலப்பிற் றேவர் பாதகச்சூர் தன்
பொழிபப்பணித்தாய்போற்றி, விரசுகொடுஞ்சுமதிபெரும்
பாவம் வீட்டிவிடாத சிவலோகத் துய்த்தாய்போற்றி, அ
ரசொருவன் முசுவதன மாற்றிமக்க ளானனமார் தரச்
செய்த வடிகேள் போற்றி, சார்பதிமே பியசாபமொழிந்
து முன்போற் றுதைபோக நகர்ந்திடச்செய் துரையே
போற்றி 93

அருவியுறு கரிகாற்கிள் ளிமைமே வுற்ற தோலாத கொ
லைப்பழியைத் தொலைத்தாய்போற்றி, மருவியநம் வன்

---

இது முதல் 98-வது செய்யுளீரண்டாவதடி யிறுதிவரையும் ஸ்தலபுராணக்கதைகள் யாவுமமைக்கப்பட்டமை காண்க.

றெண்டப் பெருமான் காண வயன்மள்ள னைப்நடித்தவா
தாபோற்றி, கருவினிகந் திடுதில்லை மறையோர் காணக்
கவின்றிருச் சிற்றம்பலத்தைக் கண்டாய்போற்றி, திருவி
ளங்கு காஞ்சிநதி கன்னைப்போக்கி தேவர்விடத்தாலயர்வு
தீர்த்தாய் போற்றி 94

தீர்வுகண் ணுற் றரியபல விம்மிதங்கள் செறிந்திலகக் கொ
ண்டபர சிவமேபோற்றி, போர்விலனைப் மால்பதியென் று
ரைத்த வியா தற் குற்றபெருங் குற்றமதை யொழித்தாய்
போற்றி, யார்வமுடன் விசுவாமித் திரனிறைஞ்சு மதற்கி
ரங்கி வரங்கள்பல வளித்தாய்போற்றி, பேர்வியமற் குறாத
ரசு நிலைபெற் றுளப் பெருஞ்சூமொன் றுக்கியவெம் பிரா
னேபோற்றி 95

பிரிவிலனைத் தொழுவேதன் காஞ்சிக் தீர்த்தம் பேருரின்
பெற்றியுறத் தெரித்தாய்போற்றி. பரிவினொடு தெளிதவ
நிலைசேர திக்கப் பலகேள்விக் கிறைபயக்கப் பணித்தாய்
போற்றி, தெரிவுறனு முறைதன்பா லன்பா யாங்கு திரு
மணஞ்செய் தருளியவெங் கேவே போற்றி, புரிவிசய னை
லவற்குத் தெய்வ யானை புதுக்களிநன் மணஞ் சூட்டும்
புண்யா போற்றி 96

புண்ணியமெய்க் தவக்குசத்து வசனர் வேட்ட புத்திரப்
பேறளித்தவருட் புனிதா போற்றி, நண்ணுதொழு தேநாய
கன்று பணிகள்செய்து நற்குலசே கரனுய்தல் நயந்தாய்
போற்றி, வண்ணமலி திரிகால வளவன் மாட்டுவந்தசெயி
ரறுத்தாண்ட மணியேபோற்றி, யெண்ணரிய வுபதேசமு
மையாள் மேவி யிடையருக் களிப்பெய்த விசைத்தாய்
போற்றி 97

போற்றுமொரு திருநீற்று மேட்டுப் பூதி புனைந்தவர்கள் வேண்டுவன புகுப்பாய் போற்றி, தேற்றியுளம் விசேடபூசைகள்செய் வார்க்குச் சித்திமுத்தி யளித்துமருள் செல்வா போற்றி, கூற்றுவனை யுதைத்ததிருத் தாளின்மீது குலவுமறைச் சிலம்பணிந்த குழகா போற்றி, எற்றுவரிக் கொடியுயர்த்த வெந்தாய் போற்றி யெழிற்பேரைப் பதியமர்ந்த விறையே போற்றி 98

ஏந்துமொரு மரக்கலமாய்ப் பவநீருறு மிரும்பிறவிச் சாகரத்தை யிகந்தே யேறித், தேந்துளவ மாலவற்குந் தெரிதரேற்றுந் தேங்கமலப் போதனைநின் றிருத்தாண்மீது, போந்தடியே னலமேவ வருளே கூடும் போதெந்தப் போதுணரப் புகல்வா யையா, பாந்தண்முடி மீதணிந்த சிவனே பேரைப் பராபரனே பசுபதியே பவளக் குன்றே 99

குன்றமெறிந் தவனிலத்துங் குலிசப் புத்தேள் குலவுமொரு நிலத்துமெழிற் கோபா லன்று, னின்றுவதி தருநிலத்தும் வருணப் புத்தே ணெடுநிலத்து முறுஞ் செல்வ மறவிட்டேகி, மன்றினடம் புரிகின்ற பெருமா னுள்ள மகிழ்ந்தெதகத் தலத்தினுஞ் சீர்வாய்ந்த தென்று, சென்றடையுந்திருப்பேரு ரடைந்திவ் வேழை சேர்வரிய வவன்கருணைத் திருப்பெற் றேனே 100

---

## திருப்பேரூர் பதிற்றுப்பத்தந்தாதி

முற்றும்.

---

நடேசர் அச்சுயந்திரசாலை, கோயமுத்தூர்.